# 007 ஜேம்ஸ் பாண்ட்

துப்பறியும்




# அழகியைத் தேடி...!

ரூ.1-50




சென்னை
1-[illegible]-84

வாசக பெருமக்களே!

உங்கள் அனைவருக்கும் எங்கள் அன்பு வாழ்த்துக்கள்!

இதோ உங்கள் கையில் "ராணி காமிக்ஸ்" தவழ்கிறது. தமிழ் மக்களுக்கு "ராணி" வார இதழ் நிர்வாகத்தினர் வழங்கும் புதிய படைப்பு, இது!

கதைகளைச் சித்திரங்கள் மூலம் சொல்லும் பழக்கம், தொன்று தொட்டு இன்று வரை இருந்து வருகிறது. விறுவிறுப்பான கதைகளை, படங்கள் மூலம் சொல்லும் காமிக்ஸ் பத்திரிகைகள் வெளிநாடுகளில் பிரபலம் அடைந்துள்ளன. காமிக்ஸ் பத்திரிகைகளுக்கான கதைகளையும், துணுக்குச் சித்திரங்களையும் தயார் செய்யும் புகழ்பெற்ற நிறுவனங்களும் அங்குள்ளன.

ஆனால், தமிழ்நாட்டில் சித்திரங்கள் மூலம் கதை சொல்லும் காமிக்ஸ் பத்திரிகைகள் இல்லை. இந்தக் குறையை

நன்குணர்ந்த "ராணி" வார இதழ் நிர்வாகத்தினர், இந்த "காமிக்ஸ்" பத்திரிகையை கொண்டு வந்துள்ளனர்.

இதற்காக, வெளிநாடுகளில் புகழ்பெற்ற "காமிக்ஸ்" நிறுவனங்களிடம் இருந்து, "ஒரிஜினல்" படக் கதைகளை வாங்கி அவற்றை எளிய, இனிய தமிழில் மொழி மாற்றம் செய்து, மூலக்கதையின் அழகும் சுவையும், குறையாமல் கொடுக்கிறோம்.

திகில், மர்மம், விறுவிறுப்பு அனைத்தும் கொண்ட துப்பறியும் ஜேம்ஸ்பாண்ட் கதைகள், மயிர்கூச்செறியும் சண்டைக் கதைகள், வீர சாகசம் மிக்க உளவாளிகளின் கதைகள் ஆகியவை, படிப்போர் மனதைக் கவரும் வகையில் அமைந்திருக்கும். சுருங்கக் கூறின், விறுவிறுப்பான ஆங்கில திரைப்படத்தைப் பார்க்கும் உணர்வை அவை ஏற்படுத்தும்.

மொத்தத்தில், குடும்பத்தில் அத்தனை பேரும் படித்து பரவசம் அடையக்கூடிய இந்த புதிய முயற்சியை, தமிழ் மக்கள் வாழ்த்தி வரவேற்பார்கள் என்ற இனிய நம்பிக்கை எங்களுக்கு உண்டு.

வணக்கம்.

ஆசிரியர்.

☆

ராணி காமிக்ஸ்— 1 TV 1-7-84
(மாதம் இருமுறை இதழ்)

# 007 ஜேம்ஸ் பாண்ட்

## துப்பறியும்

# அழகியைத் தேடி...!




அதோ அவள்தான் ஜூலி. மிஸ்டர் ரூபியின் காதலி.
இரவு நேரம். சுவிட்சர்லாந்து நாட்டில் உள்ள ஜூரிச் நகரையொட்டி உள்ள ஒரு பங்களா பால்கனியில், ஒரு அழகி வந்து நின்றாள்.


அந்த பங்களாவைச் சுற்றி உயரமான மதில் சுவர் இருந்தது. கதவு பூட்டப்பட்டு காவல் போடப்பட்டு இருந்தது. பங்களாவை அடுத்து இருந்த ஒரு மரத்தில், இங்கிலாந்து நாட்டில் பிரசித்திபெற்ற ரகசிய உளவாளி 007 ஜேம்ஸ்பாண்ட் உட்கார்ந்து இருந்தார். அவர் அருகே பெண் உளவாளி ஜெசிக்கா அமர்ந்து இருந்தாள்.


பாண்ட்! நம்ம இலாகாவில் மிஸ்டர் ரூபியை மர்மமான பயங்கர மனிதர் என்று கருதுகிறார்களே!
ஆமாம்! நீக்ரோ புரட்சிக்—காரர்களின் மூளை அவர்தான்.


இருவரும் பேசிக்கொண்டே அழகி ஜூலியை கண்காணித்தனர்
இன்னும் அரை மணி நேரத்தில் மிஸ்டர் ரூபி வருவார்.


ஜேம்ஸ்! அந்த சுவரில் கண்ணாடி துண்டுகள் பதிக்கப்பட்டு உள்ளன. மின்சார கம்பியும் உள்ளது. ஜாக்கிரதை.
இந்த உலோக கம்பு இருக்கும் வரை. பிரச்சினை இல்லை


அவள் உள்ளே போய் விட்டாள்-
நான் சுவரைத் தாண்டப் போகிறேன்


உலோக கம்பில் இருந்த ஒரு பொத்தானை அழுத்தியதும் உள்ளிருந்த உலோக குழாய் பகுதி பகுதியாக வெளியே வந்து நீண்டது.
இப்போது ஒரு தாண்டு!






உள்ளே பாய்ந்து வந்த ஜேம்ஸ்பாண்ட், மீண்டும் உலோக கம்பின் உதவியால் பால்கனிக்கு துள்ளினர்.





மேலே வந்ததும், உலோக கம்பின் பொத்தானை 007 அழுத்த அது சுருங்கிக் கொண்டது.
ஜூலி குளித்துக் கொண்டிருக்கிறாள் போலிருக்கிறதே!








வணக்கம் மிஸ் ஜூலி! சத்தம் போடாதே. ஏன் எனில் இந்த துப்பாக்கி வெடிப்பதை நான் விரும்பவில்லை!




யார்... யார்... நீங்கள்?
நான் உன் அழகை ரசிப்பவன்.


உன். அழகை முழுமையாக ரசிக்க, இந்த அங்கியை எடுத்துவிடு.


நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள்?
உனக்கு கஷ்டம் கொடுக்கமாட்டேன்.


நேற்று உன் காதலன் ரூபி, ஒரு நெக்லஸ் கொடுத்தார் அல்லவா?


ஆமாம்! அதற்கென்ன?
அதை அணிந்து கொள்.


ஏன்? எனக்கு புரியவில்லையே!
புரியவேண்டாம். நான் சொல்வதைச் செய்.


உம்! அதை அணிந்து கொள்.


குட்! இப்போது அப்படியே அந்த பால்கனிக்கு நடந்துபோய் நில்.


என் உடம்பில் ஆடை இல்லையே!
நெக்லஸ் இருக்கே! அது போதும்!


இங்கே நின்றால் வெளியே தெரியுமே.
வெளியே தெரியப்படுத்த வேறு வழி இருக்கு!


கிளிக்!


ரூபி கொடுத்த நெக்லசுடன் நிற்கும் ஜுலியை ஜேம்ஸ்பாண்ட் அணைப்பதை ஜெசிக்கா போட்டோ எடுத்தாள்.
கிளிக்!


ஜுலி நீ ரொம்ப அழகி. இனி நீ உள்ளே போகலாம்.

அந்தநேரத்தில் பங்களா காம்பவுண்ட் கதவு மின்விசையால் திறந்தது.

மிஸ்டர் ரூபி வருகிறார்.

மெய்க்காப்பாளன் மாக்ஸ், கதவை திறக்க ரூபி இறங்கினார்.

மிஸ்டர் ரூபி வணக்கம்.

பார்னி! உன்னைப் பார்க்கும் போது உன் வலுவான உடலமைப்பு திகைப்பூட்டுகிறது.

சண்டைப் பயிற்சி மூலம் உடலை தயார் படுத்தி வைத்துள்ளேன்.

ரூபி! அமருங்கள். ஜூலியிடம் தகவல் சொல்கிறேன்.

ஜூலி! ஜூலி!


ரூபி வந்திருக்கிறார்!
நான் தயாராகவில்லை. அதனால்...


மிஸ்டர் ரூபியை மேலே வரச்சொல்.


அம்மா இன்னும் தயாராகவில்லை. எனவே உங்களை மேலே வரச் சொன்னார்கள்.
அவள் அழகுக்கு "மேக்-அப்" தேவை இல்லையே!


ஜூலி! ஜூலி!


கண்ணாளரே வாருங்கள்.


கண்மணியே! குட் ஈவினிங்!


மிஸ்டர் ரூபி!
சிவபூஜையில் கரடிபோல் நான்.
உள்ளே வந்து, கதவை
சாத்துகிறீர்களா?


ரூபி கதவை
சாத்தியதும்,
உலோக
கம்பில்
இன்னொரு
பொத்தானை
ஜேம்ஸ்
அழுத்தினார்.


அந்த
உலோக கம்பு,
துப்பாக்கியாகவும்
மாறும் தன்மை
கொண்டது.


மயக்கம் வரச் செய்யும்
குண்டு பாய்ந்து, ரூபி
சாய்ந்தார்.
ரூபி!
தூங்கும்!


இப்போது
உன்முறை
ஜூலி.


என்னைக் கொல்லப் போகிறீர்களா?
அது நீ நடந்து கொள்ளும் முறையை பொறுத்தது.


வாயை மூடிக் கொண்டு படுத்துக்கொள். உனக்கு தீங்கிழைக்க மாட்டேன்.


இனி, ரூபியிடம் நான் வந்த வேலையை பார்க்கிறேன்.


இதென்ன, டைரியா?


சங்கேத மொழியில் எழுதப்பட்டு உள்ளதே!


ஆனால், அதை முறைப்படுத்தினால் பயன் உள்ள தகவல்கள் கிடைக்கும்.
கிளிக்!


ரூபியின் டைரியை நுண்ணிய படங்களாக எடுத்துக் கொண்டார், 007.
டைரி ரூபியிடம் பத்திரமாக இருக்கட்டும். அதை நான் தொட்டதாகவே அவருக்கு தெரியக்கூடாது.


ஜூலி! நீ ஒத்துழைத்ததால் காரியம் கச்சிதமாய் முடிந்தது.


இன்னும் ஒரு வேலை பாக்கி.


ரூபி அணிந்திருந்த மோதிரங்களை ஜேம்ஸ்பாண்ட் ஆராய்ந்தார்.
விலைமதிக்க முடியாத வைர மோதிரங்கள்.


ஒரு லட்சம் டாலராவது கிடைக்கும். நல்ல காரியத்துக்காக அவற்றை கழற்றிக் கொள்கிறேன்.


ஜூலி! நீ ஒரு சின்ன உதவி செய்யணும்.


ரூபி
வழக்கம்போல் தன்
மெய்க்காவலனுடன்
வந்திருப்பார்.
அவனே "இன்டர்காம்"
போனில் கூப்பிடு.


மாக்ஸ்!
உன்னே அம்மா
கூப்பிடுகிருர்கள்.


மாக்ஸ்! உன்
முதலாளிக்கு
அஜீரணம்.
கொஞ்சம்
மாத்திரை
வாங்கிவா.


விருந்தில் ரூபி
அதிகமா
சாப்பிட்டுவிட்டார்
போலிருக்கு.
ஜீரண மாத்திரை
வாங்கப் போறேன்.


அவன்
போகிருனு
என்று
பார்க்கிறேன்.


காரில் அவன்
போய்விட்டான்.
இனி உன் வீட்டில்
உள்ள காவலாளி
பெண்ணேக்
கூப்பிடு.


பார்னி!
மேலே வா.
மிஸ்டர் ரூபி
சங்கடப்படுகிறார்.
அவருக்கு
உதவணும்.


பாஸ் இப்படி
அளவுக்கு மீறி
சாப்பிட்டுவிட்டு
அவதிப்படுகிறாரே!


அம்மா!
அம்மா!
உள்ளே
வா.


குண்டுப் பெண் பார்னி
உள்ளே வந்ததும். மயக்க
குண்டை சுட ஜேம்ஸ்,
பொத்தானை
அழுத்தினார்.


ஆனால், கோளாறு
ஏற்பட்டு உலோக
கம்பு சுடவில்லை.
சே! நல்ல நேரத்தில்
இது காலை
வாரிவிட்டுவிட்டதே.




துப்பாக்கியால் சுட பாண்ட்
தயங்கியபோது, குண்டுப் பெண்
தாக்கத் தொடங்கினாள்.


பறந்து வந்த நாற்காலி
007 தலையில் மோதி,
நிலை தடுமாற வைத்தது.


அழையா
விருந்தாளிக்கு
பார்னி
கொடுக்கும்
பரிசு
இதுதான்!


துப்பாக்கியால் சுட்டு வேலையை
கடுமையாக்க விரும்பாத ஜேம்ஸை
பார்னி தொடர்ந்து தாக்கினாள்.






ஒருபுறமாக
உருண்டு தப்பித்த 007,
குண்டுப் பெண் காலை
தட்டிவிட்டார்.








கீழே விழுந்த பார்னி,
ஜேம்ஸ்பாண்டின்
துப்பாக்கியை எடுக்க
முனைந்தாள்.








இவளும் மூர்ச்சையாகி விட்டாள். வா போகலாம்.


எங்கே?
கார் ஷெட்டுக்கு!


காரை நீ ஓட்டு. நான் காருக்குள் பதுங்கிக்கொள்றேன். என் துப்பாக்கி உன்னை குறி பார்த்துக் கொண்டிருக்கும். எச்சரிக்கை.


மயக்கம் தெளிந்த பார்னி, பாண்டும் ஜூலியும் இல்லாததை அறிந்தாள்.
கார் புறப்படுவது போல் தெரிகிறதே!


அவர்கள் வெளியே போகக் கூடாது. ரூபி என்னை குற்றம் சாட்டுவார்.


வாட்ச்மேன்! அந்த காரை வெளியே விடாதே. விட்டால் நீ தொலைந்தாய்.


இதோ
காரில்
அவர்கள்!


பார்னி!
கவலை வேண்டாம்.
அவர்களைப் போக
விடமாட்டேன்.




நிறுத்து.
இல்லாவிட்டால்
சுடுவேன்.






கதவைத் திற. இல்லாவிட்டால் சாவாய்.




காரை வேகமாக ஓட்டிப் போய், காம்பவுண்டுக்கு வெளியே நிறுத்து.


கார் நின்றதும். மரத்தில் இருந்த பெண் உளவாளி ஜெசிக்கா காரில் ஏறிக்கொண்டாள்.
போட்டோ எடுத்தாயா?
அற்புதமாக அரை டஜன் படங்கள் எடுத்தேன்.


20 நிமிடம் கழித்து, அந்தக் கார் ஜூரிச் நகரில் ஒரு வீட்டின் முன் வந்து நின்றது.
உள்ளே போங்கள்!


இதற்கிடையில் மெய்க்காப்பாளன் மாக்ஸ், ரூபியின் வீட்டுக்கு திரும்புகிறான்.
ரூபி மயக்கமாக இருக்கிறார். ஒரு சிக்கல்...
உண்மையாகவா?


மயக்கமூட்டும் துப்பாக்கி குண்டு தாக்கி உள்ளது. காலையில்தான் சரியாகும். தூக்கு, படுக்கையில் கிடத்துவோம்.


உன்னையும், "பாஸ்" சையும் தாக்கியவன் இங்கே எப்படி வந்தான்?
மணி அடிக்கும் மின்சார கம்பி, வாசலில் ஆயுத காவல் இவற்றை மீறி எப்படி நுழைந்தான்?


எனக்கு ஜூலி மீதே சந்தேகம்.


உண்மைதான். அவன்தான் அவனை காரில் உள்ளே கொண்டு வந்திருப்பாள்.
இல்லாவிட்டால், ரெண்டு பேரும் சேர்ந்து போவார்களா?


இங்கிலாந்து அரசாங்கத்தைச் சேர்ந்த அந்த வீட்டில்......
பாண்ட்! நான் எடுத்த படங்கள் நன்றாக வந்துள்ளன.


என்னை பங்களாவுக்குள் அழைத்துச் சென்றது யார் என்பதை இந்த படங்கள் காட்டிவிடும்.


என்னை கட்டாயப் படுத்திதானே படம் எடுத்தீர்கள்?
உண்மைதான். ஆனால், அது ரூபிக்கு தெரியாதே.


இந்த படங்களை என்ன செய்யப் போகிறீர்கள்?
நேற்று ரூபி கொடுத்த நெக்லசுடன் நீ இருக்கும் இந்த படங்களை, அவருக்கே அனுப்பி வைக்கப் போகிறேன்.


இந்தப் படங்கள் இன்று ரூபி வருவதற்கு சற்று முன் எடுக்கப் பட்டவை என்று அவர் அறிய வேண்டும்.


இதைப் பார்த்தால் ரூபி என்னை கொன்று விடுவார்.
ஏற்கனவே அவருக்கு உன் மீது சந்தேகம்.


இந்தப் படங்களை அவர் பார்த்ததும் நீ தொலைந்தாய்.


எனவே, நீ எங்களுக்கு உதவினால் நாங்கள் உனக்கு உதவுவோம்.
நான் என்ன செய்யணும்?


சரி,
செய்கிறேன்.
நாங்கள் சொல்றபடி செய். உன்னை பாதுகாப்பாக பாரீசுக்கு அனுப்பி வைக்கிறோம்.


அடுத்த நாள்...
பார்னி,
இது என்ன?
காலையில் உங்களுக்கு வந்த அந்தரங்க தபால்.


இந்த படங்கள்...உம், அவளை நான் விடமாட்டேன்.


பாஸ்! என்ன விஷயம்?
ஜுலி துரோகி ஆகிவிட்டாள். அவளைக் கொல்லாமல் விடக்கூடாது.


அவள் நெக்லஸ் அணிந்திருப்பதை பார்த்தால், நேற்று எடுத்த படம் இவை.


ஆமாம்! நேற்று மாலை எடுத்த படங்களே.
போன்.
டிரிங்...


ரூபி ஹியர். யார் பேசறது?
நான் யார் என்பது முக்கியமல்ல. ஜூலியின் புதுக் காதலன் பற்றி என்னிடம் தகவலிருக்கு.


அது நம்பும்படியாக இருந்தால் எனக்கு தேவை. எவ்வளவு பணம் வேண்டும்?
பணமே வேண்டாம்!


அவள் புதுக் காதலன் ஒரு வெள்ளைக்காரன். பெயர் மார்க். பாரீசில் இருவரும் தங்கப்போகும் விலாசத்தை தருகிறேன்.


பாஸ், முக்கிய தகவலா?
ஜூலியைப் பற்றிய தடயம் கிடைச்சிருக்கு.


தகவல் கொடுத்தது யார்?
ஒரு பொறாமை கொண்ட பெண். அவள்தான் இந்த படங்களையும் அனுப்பி இருப்பாள்.


நம்பக்கூடியதா?
உன்னுடன் இன்னொருவனை சேர்த்துக்கொள். பாரீஸ் போங்கள். அவளைக் கண்டு பிடியுங்கள்.


இங்கிலாந்து
அரசாங்க வீட்டில்...
தனி விமானத்தில் பாரீஸ் போகிறோம்.
நாம் எங்கே போகிறோம்?


ரூபியின் ஆட்களும் பாரீசுக்கு பயணமாகினர்.
விமான நிலைய லாக்கரில் நமக்கு ஆயுதம் தயாரா இருக்கு.


அவள் எங்கே?
மான்ட்மார்டி என்ற இடத்தில் ஒரு மாடி வீட்டில்...


நாம் வருவோம் என்று ஜுலி எதிர்பார்ப்பாளா?


இருக்காது. அந்த மர்ம டெலிபோனில் பேசியவளிடம்கூட நாம் வருவது பற்றி பாஸ் சொல்லவில்லை.


உம்... இவர்கள் ஆயுதம் தரித்திருக்கிறார்கள் என்பதை அவர்கள் கோட் காட்டுகிறது.


ஒருவேளை ஜூலியும் காதலனும் இங்கில்லையா?
ஒரு பதிலும் இல்லையே!


நாம் உள்ளே போய் பார்ப்போம்.


அதற்கு கீழ் உள்ள வீட்டில்...
இந்த எச்சரிக்கை விளக்கு, அவர்கள் ரூபி ஆட்கள் என்பதை காட்டுகிறது.


ஒரு ஆணும் பெண்ணும் இங்கிருந்த அறிகுறிகள்.
ஜூலி பயன்படுத்திய சென்ட் வாசனை


இங்கே ஒரு குறிப்பு.
இதோ ஜூலியும், அந்த வெள்ளைக்காரனும் உள்ள படம். சரியான இடத்துக்கே வந்துள்ளோம்.


இதற்கிடையில்...
ரூபியின் ஆட்கள் இப்போது மேலே இருக்கிறார்கள்.


அதில் என்ன எழுதி இருக்கு?
நீயே வாசி.


கண்ணே ஜூலி!
எதிர்பாராமல்
புறப்படுகிறேன்.
அடுத்து நீ
என்னை எங்கே
சந்திக்க வேண்டும்
என்பதை பிறகு
எழுதுகிறேன்.
மார்க்....


ரூபியின் ஆட்கள் வந்திருப்பதை அறிந்த ஜேம்ஸ்பாண்ட் ஜூலியிடம் கூறினார்—
உனக்கு ஒரு பாதுகாப்பான இடம் ஏற்பாடாகி இருக்கு.


ஜூலியின் காதலன் எழுதிய குறிப்பு இது. விரைவில் ஜூலி இங்கு வருவாள்.
ஜூலிக்கு என்னைத் தெரியும். எனவே,


நான் மறைந்து கொள்கிறேன். நீ காத்திருந்து அவள் வாசலில் வந்ததும் வா.
சரி.


உனக்கு ஏற்பாடாகி உள்ள இடத்தில் பணம், துப்பாக்கி எல்லாம் தயாரா இருக்கு. நீ போ. பிறகு உன்னுடன் தொடர்பு கொள்கிறேன்

ஜேம்ஸ்பாண்ட் கூறிய இடத்தில் ஜூலி விடப்பட்டாள்.

இங்கே இறங்குங்கள்.

ஜூலி இறங்குவதை ஜேம்ஸ்பாண்டின் உளவாளி பெண் கவனிக்கிறாள்.

ஓ! ஜூலி வந்து விட்டாள்.

அதே நேரத்தில் ரூபியின் கையாளும் அவளைப் பார்க்கிறான்.

இதோ! நாங்கள் தேடும் பறவை.

ஜேம்ஸ்பாண்ட் ஆள் பேசுகிறேன். ஜூலியை நிறுத்து. துப்பாக்கியுடன் ரூபி ஆட்கள் காத்திருக்கிறார்கள்.

அம்மா! உள்ளே வாருங்கள்.




சார்! எல்லாம் திட்டமிட்டபடியே நடந்தது. ரூபி ஆள் சுட்டான்.


ஆனால், ஜூலி காயமின்றி தப்பிவிட்டாள்.
சரி! ரூபியின் ஆட்களை தொடர்ந்து கவனி.


என்ன ஜூலி திரும்பிவிட்டாய்?
நான் தங்கவேண்டிய இடத்தில் ரூபி ஆட்கள் ஏற்கனவே வந்துள்ளனர்.


நான் பாரீஸ் வந்ததை ரூபி அறிந்திருக்கிறார்.
அப்படியானால் ஜெனிரோவுக்கு போ. நான் ஏற்பாடு செய்கிறேன்.


எனக்கு விளங்கவில்லை.
ரூபியிடம் நான் எடுத்த வைர மோதிரங்கள் இவை. இவற்றை விற்று வசதியாக இரு.


உளவு துறை தலைமை அலுவலகத்தில்..
007 ஜேம்ஸ்பாண்ட் செய்தி. பாரீசில் இருந்து லண்டன் வருகிறார். ரூபி விஷயமாக.



தலைமை அலுவலகத்தில், 007.
அப்படித்தான் தெரிகிறது.
நமது வலையில் ரூபி விழுந்துவிட்டான் என்று நினைக்கிறாயா?




இல்லாவிட்டால் ஆட்களை பாரீஸ் அனுப்புவாரா? அவர் ஆள் துப்பாக்கியால் சுட்டு இருக்கிறானே!




இப்போது ரூபியின் ஆட்கள், மார்க்கும் ஜூலியும் சந்திக்கப் போகிற இடம் எது என்று துடித்துக் கொண்டிருக்கிறார்கள்.




ரூபியின் டைரியை நான் படம் பிடித்தேனே அது என்ன ஆயிற்று?
அந்த சங்கேத மொழியை நமது நிபுணர்கள் கண்டுபிடித்து விட்டார்கள்.




ஒரு பக்கத்தில் ரூபியின் ஆப்பிரிக்க ஏஜெண்ட் விவரம் உள்ளது. அவன் பெயர் குர்த். அக்ராவில் உள்ள ஓமர் டிரேடிங் கம்பெனிதான் விலாசம்.




எனது அடுத்த நடவடிக்கை?
அடுத்து நீ ஒரு நீக்ரோ அழகியை சந்தி. பெயர் குமாரி டமரா. அவள் ஒரு மாடல் அழகி. நியூயார்க்கில் இருந்து இன்றுதான் வந்துள்ளாள்.


இது மாடல் அழகி, உடை மாற்றும் அறை. உள்ளே போகக் கூடாது.
எப்படியாவது போக வேண்டுமே.


இந்தா இதை வைத்துக்கொண்டு வழிவிடு.


குமாரி டமரா யார்?


நான்தான். என்னைத் தெரியுமா?
நான் பாண்ட், ஜேம்ஸ் பாண்ட்.


அந்தப் பெயரை கேட்டதே இல்லே. ஆடை அலங்கார போட்டிக்கு நாங்கள் தயாராக வேண்டும். நீங்கள் போகலாம்.


எனக்கு கார்வரைப் பற்றி தெரியும்.


அவரைப் பற்றி என்ன தெரியும்?
அவர் நடமாற்றம் பற்றி.


மேலும் தகவல் வேண்டுமானால் போட்டி முடிந்ததும் என்னை சந்திக்கலாம். ஓட்டல் வரவேற்பு மண்டபத்தில் காத்திருப்பேன்.


போட்டி முடிந்ததும்...
பாண்ட்! சொல்லுங்கள்.


உங்கள் தந்தை கார்வர் புகழ்பெற்ற நீக்ரோ ஓவியர் சிற்பியும்கூட அவரை அமெரிக்க உளவு துறை தேடிக் கொண்டிருக்கிறது.


நீக்ரோ விடுதலை முன்னணியினர் நடத்திய பாங்கி கொள்ளையில் அவர் தொடர்பு கொண்டுள்ளதாக தேடப்படுகிறார்.
பழைய கதை. புதிதாக என்ன தகவல்?


குமாரி டமரா! விலை கொடுக்காமல் புதிய தகவல்களைச் சொல்ல முடியுமா?


என்ன வேண்டும்?
உன் தந்தை சிற்பி மட்டுமே. ஆனால், நீக்ரோ விடுதலை வீரர்கள் அவரை மறைமுகமாகப் பயன் படுத்துகிறார்கள்.


அவரை முக்கிய புரட்சிக்காரராக நினைப்பவர்கள் அமெரிக்காவிலும், இங்கு இங்கிலாந்திலும் இருக்கிறார்கள்.


உன் தந்தை எங்கிருக்கிறார் என்று உனக்குத் தெரியுமா?
அதை என் அறையில் போய் பேசலாம்.


இங்கு பேச அழைக்க காரணம்?
ரகசியமாக இருக்கட்டுமே என்றுதான்.


உன் தந்தையின் நடமாற்றம் பற்றி தெரியுமா?
தெரியாது. அமெரிக்க உளவு துறை என்னைக் கண்காணிக்கிறது.


என் தந்தை பற்றி தெரிந்துகொள்ள நான் எதற்கும் தயார்.
உண்மையாகவா? உன்னை நம்பலாமா?


உனக்கும் நீக்ரோ புரட்சியாளருக்கும் தொடர்பு உண்டா?
தொடர்பு இருந்தால், என்ன விலை கொடுத்தும் என் தந்தை பற்றி அறிய முன்வருவேனா?


சரி, உன்னை நம்புகிறேன்.


அப்பாவை எங்கே பார்க்கலாம்?
அவரை எப்படி சந்திக்கலாம் என்று தெரியும்.


சரி. சொல்லுங்கள்.
அவர் அமெரிக்காவில் இருந்து தப்ப “ருபயத்” என்ற அமைப்பு உதவியது.


அந்த அமைப்பின் தலைவர் மிஸ்டர் ரூபி. பயங்கரமானவர்.
இதைக் குடியுங்கள்.


அந்த அமைப்பு மேற்கு—கிழக்கு நாடுகளுக்கு இடையே உளவாளிகள், குற்றவாளிகள் ஆகியோரை கடத்துகிறது.
அரசியல் கொலைகளுக்கும் அஞ்சுவதில்லை.


இந்த "ருபயத்" தின் ஒரு ஏஜெண்டான குர்த் என்பவன்தான், உன் தந்தையை அமெரிக்காவில் இருந்து கடத்தினன்.
அது எப்படி தெரியும்?


குர்த், என் தந்தையை எங்கே கொண்டு சென்ருன்?
நான் இங்கிலாந்து உளவுத் துறையை சேர்ந்தவன். எங்கள் இலாகாவுக்கு பல தகவல்கள் தெரியும்.


மிஸ்டர் ருபியின் டைரி மூலம், குர்த், காஞ நாட்டில் அக்ரா என்ற இடத்தில் இருப்பதாக தெரிகிறது.


அப்படியாஞல் அப்பாவும் அங்குதான் இருக்கிருர்களா?
அங்கே முதலில் தேடலாம்.


மிஸ் டமரா! நீ உதவிஞல் உன் தந்தையை கண்டுபிடிக்கலாம்.


இங்கிலாந்து உளவாளியான உங்களுக்கு ஒரு அமெரிக்க சிற்பியை கண்டுபிடிப்பதில் அக்கறை ஏன்?
அதுபற்றி நாம் அக்ராவுக்கு போகும்போது விமானத்தில் சொல்றேன்.


அக்ரா போகும் விமானத்தில்...
ஜேம்ஸ்! உங்கள் உறுதிமொழிபடி சொல்லுங்கள்.
நீக்ரோ விடுதலை முன்னணியினர் உன் தந்தையைப் பயன்படுத்தியது போல் அவர் மீண்டும் அரசியல் சதுரங்கத்தில் பகடைக்காயாக பயன்படுத்தப்படுகிறார்.


இப்போது அவரை பயன்படுத்துபவர்கள் ஸ்மெரிஷ் என்ற அமைப்பின் பயங்கரவாதிகள்.


அப்பா அரசியல்வாதியல்ல. பின் எப்படி அவரை வன்முறையில் ஈடு படுத்த முடியும்?
எகிப்து நாட்டில் இருந்து ஒரு தகவல் கிடைத்துள்ளது. உன் அப்பாவை கண்டு பிடித்தால் எல்லாம் விளங்கும்.


அக்ராவில் உள்ள எங்கள் ஆள், நூகுவா.
மிஸ் டமரா! உங்கள் மூதாதையர் பூமிக்கு வர வேண்டும்!


இதுதான் ஓமர் டிரேடிங் கம்பெனி.


ரூபியின் ஏஜெண்ட் குர்த் தனது சதி வேலைகளுக்கு பயன்படுத்தும் போலி நிறுவனம்.
நல்ல ஓட்டல்களை விட்டுவிட்டீர்களே! எங்கே தங்குவது?


ஜேம்ஸ்பாண்டின் ஆள் நாகுவா ஏற்பாடு செய்திருந்த இடம்—
இது ஓட்டல் மாதிரி இல்லையே.


என் வீடு இது. இங்கே தங்குவது பாதுகாப்பு. பிறகு ஓட்டலில் தங்கலாம்.


இன்றிரவு, ஓமர் டிரேடிங் கம்பெனியை சோதனை போடணும்.
பூட்டை உடைத்து நுழைந்து விடலாம்.


அன்றிரவு...
ஜேம்ஸ் ஜாக்கிரதை.
அதிர்ஷ்டம் துணை இருக்கு!


இந்த விஸ்கி பாட்டிலை வைத்துக் கொள்வோம்.
யாராவது பார்த்தால் குடிகாரர்கள் போல் நடிக்கலாம்.


ஓமர் டிரேடிங் கம்பெனி —
இரவு காவலாளி இல்லை என்றாலும், பின்னால் இருந்து நுழைவோம்.


காரை அருகிலேயே நிறுத்திக் கொள்ளலாம்.
ஓடிவந்து ஏற வசதி...!


இதுவரை யாரும் கவனிக்கவில்லே. ஜன்னலே உடைப்போம்.


யாரது? என்ன செய்றீங்க?


பாதுகாப்பு சரியா இருக்கா என்று பார்க்கிறேம்.
அப்படியா? போலீசை கூப்பிட்டால் உண்மை தெரிஞ்சுடும்!


உனக்கு இதுதான் பதில்.


இவன் வாயில் கொஞ்சம் விஸ்கியை ஊற்றினல், இவன் சொல்வது எடுபடாது.


இவனே இங்கே போடுவோம். நமது வேலைக்கு இடைஞ்சல் இல்லை


உடலில் விஸ்கியை தெளி. கையில் பாட்டிலை திணி.


சிக்கிரம் ஜன்னலை உடைத்து நுழைவோம்.


கதவை உடைத்தால் மணியடிக்கும் அலாரம் பொருத்தப் பட்டு உள்ளதா?
அப்படி தெரியவில்லை.


உள்ளே பாதுகாப்பு எப்படி என்று தெரியவில்லை.


ஜாக்கிரதையாக உள்ளே குதி.
உள்ளே எச்சரிக்கையாக இருக்கணும்.


இப்படி பாதுகாப்பே
இல்லாமலா இருக்கும்!


ஏதோ மர்மம்
இருக்கலாம்.
உள்ளே
போய்
பார்க்கலாம்.


திடீர் என்று அந்த
ஆப்பிரிக்க சிலை ஜன்னலைப்
பார்க்க திரும்பியது.


நாகுவா!
அந்த சிலையை
பார்.
மின்னல் வேகத்தில்
நாகுவா
செயல்பட்டான்.


அவன் உள்ளே குதித்ததும்,
ஜேம்ஸ்பாண்ட் ஜன்னல்
கதவை கீழே விட்டார்.


சிலையில் இருந்து ஜன்னலை
நோக்கி மின் கதிர் பாய்ந்தது.


ஜன்னல் வழியாக திருடர்கள் நுழைந்தால் இந்த சிலையில் உள்ள எலக்ட்ரானிக் கருவி செயல்பட்டு, மின் அலையை பாய்ச்சி தாக்குகிறது.
என்ன இது ஜேம்ஸ்?


அதற்குள்ள மின் இணைப்பை துண்டித்துவிடு.
உன் தலையில் சிலை ஓட்டை போட்டிருக்கும். தப்பித்தாய்.


இது இடி-மின்னல் தெய்வம் ஷாங்கோவின் சிலை.


007 உள்ளே நுழைந்து, இரும்பு பெட்டியை திறந்தார்.
ரூபியின் சங்கேத மொழியில் வந்துள்ள தந்திகள்.
எதுவும் இருக்கிறதா?


நுண் போட்டோ எடுத்துவிடலாமா?
ஆமாம்! நமது நிபுணர்கள் தகவல்களை கண்டு பிடிப்பார்கள்


மறுநாள் நூகுவா வீட்டில்...
ஜேம்ஸ்! நீங்கள் எடுத்த போட்டோ பிரிண்ட்டுகள் தயார்


என்ன கண்டு பிடித்தீர்கள்?
எகிப்தில் இருந்து கிடைத்த தகவல் உறுதியாகிவிட்டது.


ஸ்மெரிஷ் பற்றி கேள்விப்பட்டு இருக்கிறேன். ஆனால், அவர்கள் திட்டம் என்ன என்று சொல்லவில்லையே!
ஆப்பிரிக்காவில் பெரிய புரட்சி வெடிக்கலாம்.


ரூபியும், அவர் ஏஜெண்ட் தூர்த்தும் பரிமாறிக்கொண்ட தகவல்களைப் பார்த்தால் ஆப்பிரிக்காவில் நீக்ரோ புரட்சியை உருவாக்க திட்டம் தீட்டி உள்ளது தெரிகிறது.


மிஸ் டமரா! நீங்கள் எங்களுக்கு உதவும் நேரம் வந்துவிட்டது.
நான் என் அப்பாவைக் கண்டுபிடிக்கத்தான் வந்துள்ளேன்.


நீக்ரோ புரட்சிக்-காரர்களுக்கு உன் தந்தை உடந்தையாக இருக்கக்கூடாது.
அவரை கண்டுபிடித்தால், அதைச் சொல்லலாம்.


மிஸ்டர் ரூபிக்கு, அவரது சங்கேத மொழியில் ஒரு தந்தி கொடுக்கப் போகிறேன். அதன் விளைவாக உன் அப்பாவைக் கண்டு பிடிக்கலாம்.


மிஸ்டர் ரூபி, ஜூரிச் நகர் அருகே அவரது பங்களாவில் இருக்கிறார். பாரிசுக்கு அழகி ஜூலியை தேடிச் சென்ற அவரது மெய்க்காவலன் மாக்ஸ் வந்து சந்திக்கிறான்.
என்ன செய்தி?
ஜூலிக்கு அனுப்பப்பட்ட இந்தக்கடிதத்தை கைப்பற்றினேம்.


அவள் காதலன் எழுதியது.
அவளை கானுநாட்டுக்கு வரும்படி எழுதி இருக்கிறான். நானும் அங்கே போகிறேன்.


பார்னி! என்ன அது?
ஆப்பிரிக்காவில் இருந்து அவசர தந்தி.


கானு நாட்டில்...
என் அப்பாவை உறுதியாக கண்டுபிடித்து விடலாமா?
கண்டுபிடித்து விடலாம். மிஸ்டர் ரூபி இன்னும் 3 நாளில் இங்கே வருகிறார். ராயல் ஓட்டலில் தங்குகிறார்.


எனது தந்தியை நம்பி இங்கு வந்து, புரட்சியை நடத்த வருகிறார்.


ஜூரிச்சில்...
காஜுவில் இருந்து, குர்த், தந்தி அடித்துள்ளான். ஜூலியின் வெள்ளைக்கார காதலன் மார்க் அங்கு நீக்ரோ புரட்சிக்கு எதிராக சதி செய்கிறானம்.
என்ன சார்! சிக்கலா?


அப்படியானால் அந்த மார்க், இங்கிலாந்து உளவாளியா?
அப்படித்தான் இருக்கணும். தான் கொடுப்பதாக போலி தந்திகள் வரலாம் என்றும் குர்த் எச்சரிக்கை செய்திருக்கான்.


கட்டாயம் போகணும். ஆனால், ஓட்டல் ராயலில் தங்கமாட்டேன்.
நீங்கள் கானு போக வேண்டுமா?


லண்டனில், உளவுத் துறை தலைமை அலுவலகம்
ஜூரிச்சில் இருந்து இந்த செய்தியை கானுவில் உள்ள குர்த்துக்கு அனுப்பும்படி ஜேம்ஸ்பாண்ட் சொல்கிறார்.


அதன்படி ரூபி அனுப்புவது போல் செய்தி அனுப்பப்பட்டது. அதை குர்த் படித்தான்.
நமது நீக்ரோ புரட்சி புயல் திட்டம் தகர்க்கப் படலாம்.
ஓமர் டிரேடிங் கம்பெனி


நான் கானு வருகிறேன். ஓட்டல் ராயலில் காத்திரு. அங்கே என்னை சந்திக்காதே. வரவேற்பு அறைக்கு வந்து விட்டு போய் விடுவேன்.


சிற்பி கார்வரின் மகள் வருவாள். அவளை சந்தி.


ஓட்டல் ராயலில் ரூபி போனதும் என்னைச் சந்திக்கும்படி குர்த்துக்கு தந்தி கொடுத்து விட்டீர்களா?
ஆமாம். ரூபிக்கும், உனக்கும் தொடர்பு இருப்பது போல் காட்ட தந்தி பயன்படும்.


இது ரூபியின் மோதிரம். அணிந்து கொள். நமது திட்டத்தை இது உறுதிப்படுத்தும்.


44 மணி நேரம் கழித்து அக்ரா விமான நிலையத்தில்...
மிஸ்டர் ரூபி வந்து விட்டார். ஜேம்ஸ்! மிஸ் டமரா தயாராக இருக்கட்டும்.


டமரா! ரூபி வந்துவிட்டார். ஓட்டல் ராயலுக்கு போக தயாராகு.
எனக்கு பயமா இருக்கு.


மிஸ்டர் ரூபி ஓட்டல் ராயலுக்கு வந்தார்.
ரூபி வந்து விட்டார். அவர் உத்தரவுபடி பார்த்தும் பார்க்காதது போல் இருப்பேன்.
அதோ குர்த்! அவன் தந்திப்படி அவனை பார்த்ததாக காட்டிக்கொள்ள மாட்டேன்.


அதை கேன்சல் செய்யுங்கள்.
உங்களுக்கு ரூம் ரிசர்வ் செய்திருக்கு.


எனக்கு ஏதாவது செய்தி வந்தால் ஜார்ஜ் ஓட்டலுக்கு தகவல் கொடுங்கள்.
மிஸ் டமராவை பார்த்த பிறகுதான் மிஸ்டர் ரூபியை சந்திக்கணும்.


மிஸ் டமரா! அதோ ரூபி!


ரூபி போனதும் டமரா ஓட்டலுக்குள் நுழைந்தாள்.


அக்ராவில் நீண்டநாள் தங்குவீர்களா?
அது நான் சந்திக்க வேண்டிய ஆளைப் பொறுத்தது.


அவள் ரூபியின் மோதிரத்தை அணிந்திருக்கிறாள்.
க்ளிக்!


படம் தெளிவாக வந்துள்ளது.


இதை சிற்பி கார்வரிடம் காட்டினால் தன் மகள்தானா என்று சொல்லிவிடுவார்.


மிஸ்டர் குர்த் அக்ராவில் இருந்தா வருகிறீர்கள்?
ஆமாம்.


மிஸ்டர் கார்வர்! உங்களைத் தேடி...
குர்த்! என் மறைவிடத்துக்கு வர காரணம் என்ன?


ஏதாவது பிரச்சினையா?
இந்த போட்டோவைப் பாருங்கள்.


இது எனது மகள் டமரா.
அதை உறுதிப் படுத்தவே வந்தேன்.


ஆமாம்! மிஸ்டர் ரூபி அவளை இங்கே வரச் செய்துள்ளார்.
என் மகள் இங்கே காணுவில்தான் இருக்கிருளா?


வந்திருப்பது உங்கள் மகள்தாளு என்று உறுதி செய்ய வந்தேன்.
மாலேயில் அவளை இங்கு அழைத்து வருகிறேன்.


போன் அடித்தது.
அது குர்த்தாக இருக்கலாம்.
டிரிங்!


வரவேற்பு அறையில் குர்த் வந்துள்ளான்.
நான் பின்புறமாக போய் விடுகிறேன்.


மிஸ் டமரா, இங்கே வருகிருர்கள்.


என் அப்பா பற்றி தகவல் உள்ளதா?
நிறைய உள்ளது. யாரும் ஒட்டுக் கேட்கமுடியாத இடத்தில் பேசுவோம்.


காரை நோக்கி இருவரும் நடந்தனர்.
எப்போது அப்பாவைப் பார்க்கலாம்?


கொஞ்சம் பொறுமையாக இருங்கள். நாம் எச்சரிக்கையாக இருக்கவேண்டி உள்ளது.


டமராவும், குர்த்தும் போன காரை 007 பின்தொடர்ந்தார்.
அந்த காரில் நூகுவா, ரேடியோ கருவியை பொருத்தி இருப்பான்.


அப்பா அக்ராவில்தான் இருக்காரா?
இல்லை. ஆனால், சீக்கிரம் நீங்கள் அவரை சந்திக்கலாம்.


குர்த் காரில் நூகுவா பொருத்திய ரேடியோ கருவி சமிக்ஞை அனுப்பியது.
கார் விளக்கை அணைத்து விடுகிறேன்.
பீப்..! பீப்..! பீப்..!


சற்று நேரத்தில்...
டமரா! உங்க அப்பா மறைஞ்சிருக்கும் இடம் வந்தாச்சு.


சிற்பி மறைந்திருக்கும் பங்களாவுக்கு அப்பால் 007 காரை நிறுத்தினர்.


குர்த்! நாயை கட்டிப் போடும்வரை காரில் இருங்கள்.


பாதுகாப்பு பலமாயிருக்கும். எச்சரிக்கையா இருக்கணும்.


நாய் குரைக்கிறதே!
நீங்கள் உள்ளே போங்கள். நான் பார்க்கிறேன்.


காவலாளி நாயை ஏவிவிட்டான்.
போய் மோப்பம் பிடி!


என்ன அது?


காலணிகள்!
எப்படி
வந்தது?


007 வீட்டை
நோக்கி
விரைந்தார்.
என் ஏமாற்று
திட்டம் வேலை
செய்கிறது!


நாயை
பிடித்துக்கொள்.
இல்லாவிட்டால்
அடுத்த குண்டு
உன் தலைக்கு.


ஆனால், காவலாளி
ஒத்துழைக்கவில்லை.


உடனே அவனை
ஜேம்ஸ் சுட்டார்.


அடுத்தது
நீ.


காவலாளியின் இயந்திர துப்பாக்கியை
எடுத்துக்கொண்ட 007 அதனால்
நாயை அடித்தார்.




வீட்டினுள்...
இங்கேயே
இருங்கள்.
என்னவென்று
பார்க்கிறேன்.
துப்பாக்கி
சத்தம்.


குர்த் வெளியே வரவும்
ஒரு தீனக் குரல் கேட்கவும்
சரியாக இருந்தது.
குர்த்!
காப்பாற்றுங்கள்.


என்ன
இது?
குர்த்
இந்தப்
பக்கம்
வா.


என்ன
நடந்தது?


காவலாளியும்...
நாயும்...?


குர்த்!
அடுத்தது
நீ.




குர்த்தை வீழ்த்தியதும் 007,
வீட்டுக்குள் வந்தார்.
ஜேம்ஸ்!
என்ன
நடந்தது?
வழியில்
குறிக்கிட்ட-
வர்களை
அமைதிப்
படுத்தினேன்.


யார் இது?
ஜேம்ஸ்பாண்ட். இங்கிலாந்து உளவாளி. நண்பர்.


மிஸ்டர் கார்வர்! "கரும்புயல் திட்டம்" என்ற கொலைகார சதிக்கு நீங்கள் உடந்தையாக்கப் பட்டு உள்ளீர்கள்.
"கரும்புயல்"! நீங்கள் சொல்வது பொய்.


"கரும்புயல்" என்பது நான் வடிவமைக்கும் ஒரு சிலை. பவண்டா புதிய குடியரசுக்கு போகிறது!
யார் செய்யச் சொன்னது?


பவண்டா அதிபரின் நண்பர்கள் சொன்னார்கள். சிலையில் களிமண் ஒரிஜினல் அமெரிக்காவில் காட்டப்படும்.
அது இப்போது எங்குள்ளது?


அக்ரா எல்லையில் ஒரு வார்ப்பட தொழிற்சாலையில் வார்க்கப்படுகிறது.
அப்படியானால் சிலை, கப்பல் ஏறுமுன் தடுக்க நேரமிருக்கு.


அதை எப்படி பயங்கரவாதிகள் பயன்படுத்த முடியும்?
நான் அப்படி சந்தேகிக்கிறே


அதை அமெரிக்காவில் காட்டி, நீக்ரோ புரட்சி இயக்கத்துக்கு நிதி திரட்டப்போகிறார்கள்
உடனடியாக வார்ப்பட தொழிற்சாலை போவோம்.


இதற்கிடையில்...
ஜேம்ஸ்பாண்ட்! நான் ரூபியை எச்சரித்திருக்கணும்.


குர்த் யோசித்தான்.
உடனடியாக ரூபிக்கு போன் செய்யணும்.


உங்களது கரும்புயல் சிலை"யின் களிமண் மாடல், போதைப் பொருள் ஏற்றுமதி செய்ய பயன் படுத்தப்பட இருக்கு.
ஜேம்ஸ்பாண்ட் அக்ராவை நெருங்கிக் கொண்டிருந்தார்.


நம்ப முடிய வில்லையே?
ஹீராயின் என்ற போதைப் பொருளை ஏற்றுமதி செய்து அமெரிக்காவில் விற்றால், எவ்வளவு துப்பாக்கி வாங்கலாம்.


வார்ப்பட தொழிற்சாலை எங்கே இருக்கு?
இடப்புறம் திரும்பணும்.

ஜார்ஜ் ஓட்டலில் தங்கி இருந்த ரூபியுடன் குர்த் பேசினன்.

என்ன?

உங்கள் உத்தரவுப்படி டமராவை கார்வர் இருக்குமிடம் அழைத்துச் சென்றேன். ஆனல், வெள்ளை உளவாளி இருவரையும் பிடித்துக் கொண்டான்.

கார்வர் மறைந்திருக்கும் இடத்தை யாரிடமும் நான் காட்டச் சொல்லவில்லை

உங்களிடம் இருந்து நம் பாஷையில் தந்தி வந்ததே.

நிறுத்து. உனக்கு மூளை கிடையாது. "கரும்புயல்" வார்ப்பட பட்டறையைவிட்டு போய்விட்டதா?

இன்னும் இல்லை. நான் உங்களைப் பார்க்க வருகிறேன்.

வார்ப்பட கூடத்தை 007 கார் நெருங்கியது.

இரவில் வேலை நடக்கிறதே!

பெரிய தொழிற்சாலை அல்லவா?

இதற்குள் வேலை முடிந்திருக்க வேண்டும்.

அப்படியனல் சிலையும், களிமண் மாடலும் கிடங்கியில் இருக்கும்.

மூவரும் சேமிப்பு கிடங்கியை அடைந்தனர்.

இதோ, சிலைகள்.


களிமண் மாடலை உடைத்தால்தானே போதைப் பொருளை மறைத்து வைத்திருப்பதை அறிய முடியும்?
பார்ப்போம்.


சிலைகளை சிற்பி சோதித்து பார்த்தார்.
எந்த இடத்திலும் மாடல் உடைக்கப் படவில்லை.


அப்பா சொல்வது உண்மை. அப்படி இருக்கும்போது போதைப் பொருள் கடத்தப்படும் என்ற உங்கள் சந்தேகம் எப்படி சாத்தியமாகும்?
உங்கள் சிலை பெயர் "கரும்புயல்"


ரூபி அதை "கரும்புயல் திட்டம்" என்கிறார். எனவே, இரண்டுக்கும் தொடர்பு இருக்க வேண்டும்.


துப்பாக்கி வாங்க போதைப் பொருளை மறைத்து அனுப்பப் போகிறார்கள் என்பது எனது முந்தைய கணிப்பு.
இப்போது அதைவிட கொலைகார திட்டமாக இருக்கலாம் என சந்தேகிக்கிறேன்


ஜேம்ஸ்! நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?


இந்த சிலையில் ஏதாவது இருக்கலாம். மிஸ்டர் கார்வர், இது எங்கே போகிறது?


இதற்கிடையில்...
"கரும்புயல் திட்டம்" பற்றி கார்வருக்கு ஒன்றும் தெரியாது.
வார்ப்பட தொழிற்சாலை இருப்பிடத்தை ஆங்கில உளவாளி தெரிந்துகொள்ள செய்துவிட்டாய்.


சிலையை, பவண்டா குடியரசு தலைவர் நேரடியாக பெற்றுக் கொள்வாரா?


ஏன் கேட்கிறீர்கள்?
சொல்கிறேன். சிலையை தூக்க உதவி செய்யுங்கள்.


இதற்குள் ஏதாவது இருக்கா பார்ப்போம்.
இதோ


வெடிகுண்டு! சிலையை பவண்டா குடியரசு தலைவர் குபாமி திறந்து வைக்கும்போது ரேடியோ அலைகள் மூலம் வெடிக்கக் கூடிய வெடிகுண்டு.
ஜேம்ஸ்! என்ன இது?


அப்படியானால் இதுதான் "கரும்புயல்" திட்டமா?
ஆமாம்! இந்த வெடிகுண்டு சிலை குபாமியை கொல்லும். ஆனால், பழி காஜ மீது விழும்.


இதன் மூலம் அமெரிக்கா, இங்கிலாந்து மீது பவண்டா மக்கள் வெறுப்படைவார்கள். ஏன் ஆப்பிரிக்காவில் போரே கூட மூளலாம்.
நல்ல கண்டுபிடிப்பு 007!


மிஸ்டர் ரூபி! உங்களைத்தான் எதிர்பார்த்தேன்.
மிஸ் டமரா, உங்கள் நண்பரிடம் இருந்து அந்த துப்பாக்கியை வாங்குங்கள்.


ஜேம்ஸ்! தப்ப முயன்றால் டமரா உயிர் பறிக்கப்படும்.
நான் கோழை அல்ல.


ரூபியின் கவனம் ஒரு கணம் திரும்பியது.
அப்படித்தான் மிஸ் டமரா, இரண்டு விரலால் பிடித்துக்கொள்.


விளக்கை அணைத்துவிட்டு மறைவிடம் தேடி ஓடினார், 007.


பாய்ந்து வந்த துப்பாக்கி குண்டுகளில் இருந்து தப்பினார்.
எல்லோரும் ஓடுங்கள். என்னிடம் ஒரு குண்டு உள்ளது. அது எந்த நிமிடமும் வெடிக்கும்.


குர்த்! இவர்கள் இருவரையும் பிடி. நான் ஜேம்ஸ்பாண்டை குறிவைக்கிறேன்.

வார்ப்பட கூடம் முழுவதும் இருட்டு. உலையில் உமிழும் ஜுவாலை மட்டும் ஒளி சிந்தியது.

ஜேம்ஸ்?

ஜேம்ஸ்! நீ தப்ப முடியாது. டார்ச் வெளிச்சத்தில் உன்னை கண்டுபிடித்து சுடுவேன்.

நீ ஒத்துழைத்தால் பேரம் பேச நேரம் இருக்கு.







நானும் இந்த குண்டை அங்கே போடுகிறேன்.

இருவரும் ஒரே நேரத்தில் அதை செய்யலாம்.




சரி!
துப்பாக்கியை
போட
சம்மதிக்கிறேன்.


இருவரும்
ஒன்றுபோல்
ஆயுதங்களை
போடலாம்.


பாண்ட்!
நீ ஒரு தவறு
செய்துவிட்டாய்.


கிட்டங்கியில்
கிடந்த உன்
துப்பாக்கி
இப்போது
என்னிடம்!
ரூபி
தவறு!


உன்னைவிட
மோசமாக
செயல்பட
என்னால்
முடியும்.


ரூபி இதோ, இந்த கொதிக்கும் உலோகம் உம்மை அழிக்கட்டும்.
ஆ... ஆ......


ரூபிக்கு முடிவு கட்டிவிட்டு, பாண்ட் வெளியே வந்தார்.
ஒருவரும் இங்கே நிற்காதீர்கள். எனக்கு ஒரு நிமிட வேலை இருக்கு.
கிட்டங்கி உள்...
எங்களை எவ்வளவு நேரம் இப்படி வைத்திருப்பாய்?
ரூபி வரும்வரை.


சாரி குர்த்! ரூபி இனி வர மாட்டார்!

நீக்ரோ புரட்சியாளர் என்றும், நீக்ரோ விடுதலை முன்னணியினர் என்றும், ருபயத் என்ற பெயரிலும் நடந்த பயங்கரவாதிகளின் சதி வேலைகளும், "கரும்புயல்" திட்டம் என்ற கொலைகார நாச வேலைகளும் அத்துடன் முடிவடைந்தன.










ராணி சிண்டிகேட் சார்பில் வெளியிட்டவர், ஆசிரியர்: எஸ். ராமஜெயம், 1091, பெரியார் நெடுஞ்சாலை, சென்னை—600 007. அச்சிட்டவர்: சி. கல்யாணசுந்தரம், ராணி அச்சகம், 1091, பெரியார் நெடுஞ்சாலை, சென்னை—600 007.




# அடுத்த இதழில்...




சூழ்ந்து வரும் சூது,
பாய்ந்து வரும் பகை

அனைத்தையும் தூளாக்கிய
கடமை வீரனின்
வெற்றிக் கதை!

படிக்கத் தவறாதீர்கள்!

**15-7-84-ல் வெளிவருகிறது!**

இதோ எமது விற்பனையில் ஒரு டாட்டா! ஒரு பிர்லா!

மத்திய ஆயுதப்படை பரிசுச்சீட்டு

9-10-83 அன்றைய குலுக்கலில்

எமது விற்பனையில் மாபெரும் பரிசு ரூ. 2 கோடி

பரிசு பெற்றவருடன் K.A.S.சேகர்



ஒரே குலுக்கலில் 19 பரிசுகள்
ரூ.1 லட்சம் வீதம் 2
ரூ.50 ஆயிரம் வீதம் 1
ரூ.10 ஆயிரம் வீதம் 15

கோடீஸ்வரர்களை உருவாக்கும் ஏஜண்ட்

# K.A.S.சேகர்

முதல் பரிசாக மட்டும் இதுவரை
ரூ.4 கோடிக்கு மேல் வாங்கி தந்த ராசி ஏஜண்ட்

போன்: 31945

பஸ் ஸ்டாண்ட், மதுரை

எமது கிளைகள்:

PRINTED AT RANI PRINTERS, MADRAS-7.